பட்டு நின்றனர். சுந்தரமூர்த்திகள் மாத்திரம் உள்ளேசென்று சிவபெருமானைக்கண்டு வீழ்ந்தெழுந்து தாயைப்பிரிந்து நெடுந்தூரத்திற்சென்று மீண்டுந் தனதுதாயைக்கண்டு ஆவலுடன் வந்து அணைதல்போலச் சமீபத்திலேசென்றனர். சிவபெருமான் அவரை அருகணைத்து ஆரூரனே! வந்தனையோவென்று அன்பு பாராட்டினர்.

(௩௩-௫0) சுந்தரமூர்த்திகள் சிவபெருமான் பாராட்டிய அன்பினைப்போலும், அடியனேன்பிழை பொறுத்து என்னையாண்டு முடிவில்லாத பெருங்கருணையைத்தந்தனையே, அது என்னளவினதோ! என்று பலமுறையும் பணிந்து, சிவபெருமானிடத்து என்றுமுள்ள ஆனந்தவுருவினராய் நின்று பின்னர் எனது தோழனாகிய சேரர்பெருமான்திருவணுக்கன்திருவாயலில் நிற்கின்றனர் என்றனர், என்று விண்ணப்பஞ்செய்யவும், தேவர்களிற் பெரியவராகிய பிரஹ்மவிஷ்ணுக்களைநோக்கிநீவிர் நமது தோழனுக்குத்தோழனாகிய சேரர்பெருமானை அழைத்து வாருங்களென்று கட்டளையிட அவ்விருவருஞ் சென்று அழைத்தனர். சேரனார் சிவபெருமான் ஆணையைத் தலைமேற்கொண்டு உள்ளே சென்று பெருமானைத் தூரத்தே நின்று பணிந்தெழுந்து போற்றி போற்றி என்றுபோற்றிக் கொண்டு நிற்ப, சிவபெருமான் புன்சிரிப்புடன் நாம் சுந்தரனை அழைத்தோமேயன்றி உன்னை யழைத்ததில்லையே, அழையாத நீ வந்தகாரணம் யாதென்று கேட்டனர்.

சேரர்பெருமான் எம்பெருமானே! அடியேனது அடிகளாகிய சுந்தரமூர்த்திகள் யானை மேல்வரும் போது அடியேன்

அவர் முன் சேவித்துக் கொண்டுவந்தேன். உமதுகருணை வெள்ளமானது இங்குகொண்டுவந்து சேர்த்து விட்டதே யன்றி அடியேனே இங்கு வந்ததில்லை. அடியேன் ஒருவிண்ண ப்பஞ்செய்கின்றேன். என்னையெனில், வேதங்களாலும் முநிவ ர்களாலும் துதிப்பதற்கரிய பெருமையுடைய பெரியோனே! தேவரீரைப் போற்றி உலா வொன்று பாடியிருக்கின்றேன், இப்பொழுது இவ்விடம் வன்றொண்டப் பெருமானது பெரிய சபையாகக்காணப்படுகின்றது. இந்த மஹாசபையில் அதனைத் தேவரீர் திருச்செவிசாத்தி அருளல்வேண்டும் என்பதேயாம். சிவபெருமான் கருணை கூர்ந்து சொல்லுக என்றனர்: சேரமா னும் திருவுலாவை அமுதம்போல் திருச்செவியில் ஊட்டினர்: சிவபெருமான் கருணை கூர்ந்து அன்ப! நீ நமது ஆலாலசுந் தரனுடன் பிரியாதிருக்கக்கடவாய். நீங்களிருவரும் எமது கணங்கள் புடைசூழ்ந்திருப்பத் தலைவராகவிருந்து வாழக்கட வீர்களென்று அனுகிரகஞ்செய்தனர். அக்கட்டளையின்படியே இருவரும் இருந்தனர்.

மலர்மிசை யயனு மாலுங் காணுதற் கரிய வள்ளல்
பலர்புகழ் வெண்ணெய் நல்லூ ராவணப் பழமை காட்டி
உலகுய்ய வாண்டு கொள்ளப் பெற்றவர் பாத முன்னி
தலைமிசை வைத்து வாழுந் தலைமை நந்தலைமை யாகும்.

ஆலாலசுந்தரனார் பொன்னடிவாழ்க.

ஆசார்யபிரபாவம் முற்றிற்று.

---

